உ

சிவமயம்.

# மாதர் நீதிமஞ்சரி

விருதுநகர் சங்கீத சாகித்திய வித்துவான்

மகா-ள-ள-ஸ்ரீ

அ. கந்தசாமிக் கவிராயரவர்கள்

இயற்றியது.

---

தூத்துக்குடியிலுள்ள விருதுநகர் க்ஷத்திரிய
வித்யாசாலை ரிசர்வ் பண்டின்
ஆதரவில் நடைபெற்றுவரும்
விருதுநகர் க்ஷத்திரியப் பெண்பாடசாலை
மானேஜிங் கமிட்டியின் காரியதரிசி

மகா-ள-ள-ஸ்ரீ

பெ. சி. சிதம்பர நாடாரவர்களால்

---

டார் பிரஸ் லிமிடெட்
லையில் பதிப்பிக்கப் பெற்றது

1924.

உ

சிவமயம்.

# மாதர் நீதி மஞ்சரி.

---

விருதுநகர் சங்கீத சாகித்திய வித்துவான் மகா-௱-௱ஸ்ரீ
**அ. கந்தசாமிக் கவிராயரவர்கள்**
இயற்றியதை

தூத்துக்குடியிலுள்ள
விருதுநகர் க்ஷத்திரிய வித்தியாசாலை
ரிசர்வ்ப்பண்டின் ஆதரவில் நடைபெற்றுவரும்
விருதுநகர் க்ஷத்திரியப் பெண்பாடசாலை மானேஜிங்
கமிட்டியின் காரியதரிசி மகா-௱-௱-ஸ்ரீ
பெ. சி. சிதம்பர நாடாரவர்களால்

---

சிவகாசி நாடார் பிரஸ் லிமிட்டெட்
அச்சியந்திர சாலையில்
பதிப்பிக்கப்பெற்றது.

**1924.**

---

உ

சிவமயம்.

## விருத்தம்.

மேதினி விளங்க வருமிக்க மடமாதர்
நீதிரசமஞ்சரி நிகழ்த்த வுமையாளைப்
பாதியுடல் வைத்தருள் பரம் பொருளளித்த
ஆதிகண நாதனடியஞ்சலி செய்கிற்பாம்.

---

## கணபதி ஸ்துதி.

(கல்லார்க்குங் கற்றவர்க்கு மென்ற மெட்டு)

சித்தியுடன் புத்திதருஞ் செய்யகணநாதா
செங்கமலத் தோன்றுதிக்குந் தங்கமலர்ப்பாதா
பத்திசெய்யு முத்தமர்கள் பங்கிலுறைபவனே
பன்னிருகை வேலவர்க்கு முன்னுதித்தபரனே.

---

அத்திமுக வித்தகனே ஐந்துகரத்தோனே
அல்லமரும் பூங்குழலாள் வல்லபைகோமானே
நித்தநித்தமுமடியெங்கள் நெஞ்சின்மறவோமே
நின்றுதொழுமெய்யர்முன்வந்துநின்றருள்வீர்தாமே.

## சிவபெருமான் ஸ்துதி

(கந்தப்பா வந்துசிந்தை யென்ற மெட்டு)

சிந்தித்தோ மெங்களை யாண்டருள்
சிவ சிவ சிவ சிவ சிவநாதா
தந்தித்தோந் தந்தன வென்றுபொற்
சபைதனினடமிடு கிறபாதா (சிந்தி)

எத்திக்கும் போற்றிசெயும் பர
மேஸ்பரனே கிருபாகரனே
தித்திக்குந் தேன்மொழிபார்வதி
தினமனமகிழ்பவனே யரனே (சிந்தி)

அண்டர்க்கா யன்றொரு தினமதி
லலைகடன்மிசையெழு விடமதனை
கண்டத்தே வைத்தவனே இரு
கண்மணியேவெகு தண்மணியே (சிந்தி)

அன்பர்க்கே யின்பமளித்திடு
மர ஹர வர ஹர மகதேவா
உன்பொற்பாதத் துணையேகதி
யொருதரமெமதரு கினில்வாவா (சிந்தி)

## சுப்பிரமணியர் ஸ்துதி

(தஞ்சமென்று கெஞ்சுகின்றே னென்ற மெட்டு)

தென்விருதை தன்னில்வளர் பன்னிருகையா
ஓர் பன்னிருகையா செம்பொன்னிகர்மெய்யா

தன்னிகரில்லாதசிவ ஷண்முகநாதா
ஓர் ஷண்முகநாதா ஈர் தண்மலர்ப்பாதா

தேவர்கள்சேனபதியே தெள்ளமுதமே
மாதெள்ளமுதமே நாமுள்வ நிதமே

சூரர்குலம் வேரறுத்த கூர்வடிவேலா
பொற்கூர்வடிவேலா நற்பார்வதிபாலா

எங்கள் முன்புவந்தருள்செய் யெம்பெருமானே
எ யெம்பெருமானே கடம்பணிவோனே (தென்)

---

## விஷ்ணு ஸ்துதி

(ஆதிதேவபாலனே யென்ற மெட்டு)

ஆதிமூலமேயெமை ஆண்டருள்வாய்
ஆண்டருள்வாய் அன்புசெய்குவோம்

தீதிலாததேவவுன் திருவடியைத்
திருவடியைச் சென்னிசூடினோம்

மாதுசீதைநாயகர் வரமுதவ
வரமுதவ வாருமித்ததி
நீலமேகவண்ணனே நெடுகிறுநாம்
நெடுகிறு நாம் நின்னை நம்பினோம்
காலகாலன்மைத்துனு கருணைபுரி
கருணைபுரி கண்டுபோற்றினோம்

---

சரஸ்வதி ஸ்துதி
(ஈராறுகைவடிவேலா என்ற மெட்டு)

வாலைசரஸ்வதி நீயே
வாக்கினில்வந்தருள் வாயே
காலைநன் மாலைநின் சேயே
கைதொழுவோந்திருத் தாயே
வித்தைகளுக்கதி பதியே
மேலோர்கள்தேடுநன் னிதியே
உத்தமியுன்பதங் கதியே
ஓதிடுவோமென்றுந் துதியே
வெண்டாமரைவரு நல்வி
வேகியே யீசர் புதல்வி
தண்டாதநான்மறைச் செல்வி
தந்தருள்வாயுயர் கல்வி

## வந்தனம்.

(சீரார் சபையில் வாழு மென்ற மெட்டு.)

பல்லவி.

செய்கின்றோம் நமஸ்காரம்
செய்கின்றோம் நமஸ்காரம்,

அநுபல்லவி.

ஐயன்மீர் தாய்மார்களே யாசீர்வதிப்பீர்களே (செ)

சரணம்

நன்னூல்களாய்ந்தவர்க்கும்
நற்செல்வம் வாய்ந்தவர்க்கும்
பன்னூல் படிப்பவர்க்கும்
பக்தியாய்க் கேட்பவர்க்கும், (செ)

க்ஷத்திரியப் பெண்பாட
சாலைமென் மேலும்நீட
நித்தமுஞ்சரி பார்க்கும்
நீதிபதி யெல்லோர்க்கும். (செ)

தொண்டர்க் கருளுஞ்செல்வத்
தூத்துக்குடிரிசர்வப்
பண்டுப்பணத்தினுக்கும்
பன்முறை கைகளினால் (செ)

## கும்மி.

கும்மியடியுங்கள் தங்கையரே நல்ல
கும்மியடியுங்கள் தங்கையரே
செம்மலர்போலிரு செங்கையரே ரூப
சித்திரம்போற்சிறு நங்கையரே. (1)

ஈனமுடைய ஜென்மங்கள் பலபல
இவ்வுலகத்திலிருக்க விந்த
மானுடஜென்மத்தைத் தந்தகடவுளை
வாழ்த்திக்கும்மி யடித்திடுவோம். (2)

பெண்களையாண்களை பெற்ற தாய்தந்தையர்
பிள்ளையிரண்டையுந் தங்களிரு
கண்களைப்போலெண்ணிக் கல்விச்செல்வந்தராக்
கதித்துக்கும்மி யடித்திடுவோம். (3)

பெற்றவர்தம்மினு முற்றவர்போலென்றும்
பேரறிவைத்தருங் கல்விதனைக்
கற்றுக்கொடுத்திடும் வாத்தினிமார்மனங்
களிக்கக்கும்மி யடித்திடுவோம். (4)

நீதிக்கிரமப்படியாக வென்றும்
நீடியபள்ளிக்கூடங்கள் தொறுஞ்
சோதிக்கவேவரும் இன்ஸ்பெக்டர்தம்மைத்
தொழுதுகும்மியடித்திடுவோம்,

புத்தியும்யுத்தியு மேலோங்கக்கலை
போதிக்குமுத்தமர் தான்வசிக்குஞ்
க்ஷத்திரியர்குல வித்தியாசாலை
தழைத்திடக்கும்மி யடித்திடுவோம். (6)

பூத்துப்பரிமளம் வீசிடும்பெண்கல்விப்
பூஞ்செடிக்கே செம்பொ னீர்தெளிக்குந்
தூத்துக்குடியில் ரிசர்வப்பண்டோங்கவே
துதித்துக்கும்மி யடித்திடுவோம். (7)

---

## மூளைப்பாலிகைக் கும்மி.

எண்ணுமெழுத்துந் தெரிந்த
பெண்மணியே கெட்டி யெங்கு
மிலங்குதங்கக் கட்டி சொலு
மிவையறியா மட்டி பொரு
ளிருந்துமிவளென்ன செய்வள்
சுரண்டுவளே சட்டி. (1)

நல்லொழுக்க முள்ள கன்னி
யெல்லவரும் விரும்பு கிற
ஞானரசக் கரும்பு எங்கும்

நாறும் முல்லையரும்பு இலர்
நங்கைஜன சங்கமிகழ்
கின்றபுன்று ரும்பு. (2)
கற்புடைய விற்பனிதான்
நற்பெரிய பெண்ணும் குலங்
கட்கிரண்டு கண்ணும் இலாக்
கன்னிகளி மண்ணும் அந்தக்
கடும்புலிதன் குடும்பமெனு
முடம்பினுக்கோர் புண்ணும். (3)
காலையினு மாலையினும்
நூலொடகராதி யிவை
கற்றுப்பிறர்க் கோதி யதிற்
காட்டியநன் னீதி வழி
கண்டொழுகு மொண்டொடிநற்
பெண்டுகட்கோர் ஜோதி. (4)
பின்னுறங்கி மன்னனுக்கு
முன்னம்விழித் தெழுவாள் அவன்
பொன்னடியைத் தொழுவாள் அவன்
சொன்னமுறை வழுவாள் மழை

பெய்பென்றிடப் பெய்யுமிவள்
தெய்வமெனப் படுவாள். (5)

மனையிலன்னங் கறிசமைத்து
மலர்ந்தமுகங் காட்டி யங்கு
வருவிருந்துக் கூட்டிக் கிளை
வழி சொலிப்பாராட்டி வளர்
மாதரசி மண்ணும் விண்ணும்
வாழ்த்துநற் சீமாட்டி. (6)

வரவினுக்குத் தகுந்தபடி
செலவுசெய்யு மாது வசம்
வறுமைநுழை யாது கதிர்
மறைந்திருக்கும் போது வைக்கு
மணிவிளக்கின் வெளிச்சத்தின் முன்
இருட்டுருவதேது. (7)

தூத்துக்குடி ரிசர்வப்பண்டுச்
சொன்னதனைத் தோங்கி மனத்
துள்ளக்குறை நீங்கி விடத்
தூயதமிழ் பூங்கி லேயஞ்
சொல்லிவைக்க வுதவுவதாற்
துதித்திடுவோம் பாங்கி. (8)

---

## அன்றாடம் நடந்துகொள்ளும் கடமை.

(எனக்குமுனக்கு மிசைந்த பொருத்தமென்ற மெட்டு)

காலையில்வருஞ் சூரியனுக்கு முன்னெழவேண்டும்
கடவுள்தன்னிரு திருவடிகளைக் கைதொழவேண்டும்.

நூலைஎடுத்து ஞாபகத்துட னோக்கவேவேண்டும்
நுட்பமானசொல்லனைத்துமனத் துளாக்கவேவேண்டும்

தேகசுத்திசெய்துயர் வெண்ணீற்றை யணிந்திட வேண்டும்
செய்தவமுதுண டன்னை தந்தையைப் பணிந்திடவேண்டும்.

வேகமுடனே பாடசாலைக்கு வந்திடவேண்டும்
விரிந்தபாடத்தைப் பின்னொருமுறை தெரிந்திடவேண்டும்

வாத்தியர்கள் கேள்விக்குபதில்வழுத்திடவேண்டும்
வசனிக்கும்புதுப்பாடத்தைமனத்தழுத்திடவேண்டும்,

நேர்த்தியாயவர் சொல்பவைகளை யெழுதிடவேண்டும்
நேரிடும்பிழைக் கவர்தண்டிக்கையிற் றெழுதிடவேண்டும்.

அந்திக்குவரு வாருடன்மனை வந்திடவேண்டும்
அன்னைதந்தைமார் சொல்லும்வேலைபுரிந்திடவேண்டும்

அந்திவிளக்கு முன்பிலிருந்து படித்திடவேண்டும்
பிசகிடாமலே யிட்டகணக்கை முடித்திடவேண்டும்.

வார்த்தைவெளி விடாமலேயுண்டு துயிலவே வேண்டும்
மறுதினத்திலும் பழையபடிக்குப் பயிலவே வேண்டும்.

தூத்துக்குடிநல் ரிசர்வைப்பண்டைத் தாதித்திடவேண்டும்
சொன்னகாரிய மனைத்துமனதிற் பதித்திடவேண்டும்,

## விவேகம் மனதைப்பார்த்துச் சொல்லுதல்.

(மருந்தொன்றுகொடு சொக்கநாதா என்ற மெட்டு)

என்புத்திகேளென் றன்மனமே யென்றன்மனமே நீதான்
இணங்கினாற் சுகமடைவாயனு தினமே (என்)

துன்மதியுள்ளவர் சொலுமுபதேசம்
துன்பமே தரும் பின்னுமுள் பொருள் நாசம் (என்)

தாய்தந்தைமார் சொல்லைநம்பு சொல்லைநம்பு கொஞ்சந்
தவறினால் வந்து விளைந்திடும் வம்பு (தாய்)

சேயென்று சொல்லு நமக்கு நஞ்சித்தம்
திகைக்குமுன்னவர்கட்கு மிகுந்திடும் பித்தம் (என்)

வரையறுத்தொரு நூலைவாசி நன்றாய்வாசி யிந்த
வாசிப்பில்லாதவர் மனிதரா தோசி (வரை)

உரைசெய்புமதிலுள்ள குறைகளைநீக்கு
உயர்ந்த நற்குணங்களையுன்னுக்கு ளாக்கு (என்)

நல்லவரது சகவாசம் சகவாசம் செய்யில்
நாடெங்குமாகுநம்பேர் பிரகாசம் (நல்ல)

சொல்லுமவர் திருவார்த்தைகளிணங்கு
சுத்தப்ரமத்தையுள்வைத்து வணங்கு (என்)

---

(ஆனந்தக்களிப்பு மெட்டு.)

பல்லவி

தையலேயிது நல்லபுத்தி கேட்டுச்
சரியாய்நடந்துகொள்பெரியோர்சொல்யுத்தி (தையலே)

அநுபல்லவி

செய்தொழிலன்றுய்ப் பழகு வேலைச்
செல்வந்தான் யாவர்க்குஞ் சொல்லும்பேரழகு
(தையலே)

சரணங்கள்

பொல்லாத வார்த்தைகல்லாதே தெருப்
புரணிசொன்மூடி களருகினில்லாதே
செல்லாதவீட்டிற் செல்லாதே உன்றன்
சிரசுபோனாலும் பொய்யுரை நீ சொல்லாதே
[தையலே]

தாய்செய்யும் வேலையை மாற்று தேகந்
தளர்ச்சியாங்காலத்திற் றைரியமேற்று
நீயவட்கூன்றுகோல்போலே நின்றால்
நெடுகிலுமுன்பேர் விளங்குமண்மேலே [தையலே]

கீழ்வந்த சோதரர் தம்மைப் போற்று
கேவலமல்ல நீயேயவர்க்கம்மை

தாழ்கின்றதே நன்மைமேலே வந்த
சகோதரருக்கவர் தம்மைந்தர்போலே தையலே
கைகள் மெய்சுத்தமாய் வைத்துசோறு
கறிகள் சமைப்பது பெரியசம்பத்து
ஐயமதிலலெ பெனனுதேயொன்றும்
அளவுக்குமிஞ்சியே செலவுசெய்யாதே தையலே

சிதேவி மூதேவி லாவணி

கந்தையாகினுமதைக் கசக்கியணிந்து மன்ங்
களிக்குமடந்தை நல்ல சிதேவி
வந்தபுடவையெல்லா மழுக்கடையும்படிக்கு
வைத்திருப்பவள் பொல்லா மூதேவி
குச்சுவீடிருப்பினும் லட்சணமாகவைத்துக்
கொண்டிருப்பவள் நல்ல சிதேவி
மச்சுவீடிருப்பினும் அசுத்தமடையும்படி
வைத்திருப்பவள் பொல்லா மூதேவி
தாய் தந்தை மகிழவே பணிவிடை புரிவதிற்
சடைவில்லாதவள் நல்ல சிதேவி
பேய் கொண்டவளைப்போலே சோம்பலுக் கிடந்தந்து
பின்னடைகுவள் பொல்லா மூதேவி
சண்டை விளையுமுன்பு வாய்பொத்தி மௌனத்தைச்
சாதிப்பவளே நல்ல சிதேவி

அண்டையுள்ளார் கைக்கத் தொண்டை கிழியச்சொல்லை
யள்ளி விடுவள் பொல்லா                                    மூதேவி
கல்வியெனு மழியாப் பொருண்மிசையே தினங்
காதல் வைப்பவள் நல்ல                                    சீதேவி
சொல்லுமிதைப்பழித்துப் பேசுகிறவளென்றுஞ்
சுகமடையாள் கெட்ட                                    மூதேவி

---

[என் சேவல் போனவிட மென்றமெட்டு]

என்று மதிகாலை தனில் எழுபவளே யெந்தாய்
ஒன்று முணராதவள்போல் உறங்குபவள் பெண்பேய்
கற்கு நல்ல புத்தகத்தைக் கற்பவளே யெந்தாய்
நெற்கள் குத்துலக்கையைப்போல் நிற்பவளேபெண்பேய்.
தக்கவரைக் கண்டவுடன் தாழ்பவளே யெந்தாய்
வக்கணை செய்கை செருக்கி வாழ்பவளே பெண்பேய்
தின்னுவதைப் பகுத்தெடுத்து தின்பவளே யெந்தாய்
தன்வயிறு பெரிதென்றெண்ணுந் தையலொருபெண்பேய்.
கிடைத்தபொருள் பெரிதென்றெண்ணுங் கிளிமொழியே யெந்தாய்
படைத்ததற்குக்குறைவுபண்ணும் ப[illegible]பெண்பேய்
கனிகளைப்போலினிய [illegible]
மனிதவுரும் பெற்று [illegible]றவளே பெண்பேய்

புருஷரைக்கண் டொதுங்கினிற்கும் பூக்கொடியேயெந்தாம்
வரிசையின்றி நிற்பவளு மனுசியல்ல பெண்பேய்

## இராஜவாழ்த்து

(இசைந்தவேறு யென்ற மெட்டு)

இலங்குசெம்பொன் நவமணிமுடிபுனை மகராஜன்
இசைந்தலண்டனெனுமொரு திருநகர் தனில்வாசன்
அலங்கிர்தங்கொண் டெழுமதிமுகமுள குயின்மேரி
அணங்குசிந்தை மனுதினமகிழ்வுறு மணவாளன்
நிலங்களெங்கு முள்வுபிர்பரவிடு மதிநேசன்
நிரம்புமெங்க ளுயர்கடவுளர்பத விசுவாசன்
நலம்புரிந்து குடிதழுவிடுபவன் இறைஜார்ஜ்
நறுந்தணிந்து தருநிமுனியென மிகவாழி.

[மங்களம்]

அத்தனுக்கும் அத்தனடிப் பத்தருக்கும் மங்களம்
அக்கரத்தின் உம்பருக்கும் இம்பருக்கும் மங்களம்
சித்தருக்கும் முத்தருக்கும் அத்தருக்கும் மங்களம்
சீர் சிறந்த சார்ங்கபாணிக்கும் மங்களம்
க்ஷத்திரியப் பெண்களுக்கும் சாமியென்றும் மங்களம்
சத்விஷயத்திற்குமம் சர்ச்சனர்க்கும் மங்களம்
நித்தமும் படிக்கவோ உத்தமபெண்யாவர்க்கும்
நித்திய சுப மங்களம் நித்திய சுப மங்களம்

மாதர் ... சரி முற்றிற்று.

சிவமயம்.

# சாவித்திரி சரித்திரம்.

## தொண்டிச்சிந்து

---

பூவிற்புகள் படைத்தவள்—திருநிகர்
பொற்புடையவள் மிகுந்த கற்புடையவள்
சாவித்திரி தன்சரிதம்—செவிகட்குத்
தண்ணமுதம் போலினிக்கும் உண்மையிதுவே (1)

மத்திர தேசத்தினிற்—செங்கோல் செலுத்திடும்
வச்சிரவேலிந்தர நிகர் அச்சுவப்பதி
உத்தமகுணத்திற்சிறந்த—மாளவியை
ஒப்புடன் மணம்புரிந்து தப்பிதமின்றி (2)

இல்லற நடத்தி வருநாள்—புத்திரபபே
றின்மையினல் மன்னனவன் தன்மனையுடன்
சொல்லமுடியாத துயரக்—கடலினுள்
தோய்ந்து துரும் பாயுடலம் தேய்ந்திருக்கையில் (3)

## நாரதர் வருதல்.

நாரதரங்கு வந்தனர்—அந்தமுனி
நாதன்றிருப் பாதந்தலை மீதிலணிந்து
பாரதையாளுவதற்குப்—புத்திரநற்
பாக்கியமில் லாக்குறையுள் தாக்குவதினல் (4)

சகலசம் பத்துகள் பெற்றும்—இல்லார் போல்
சஞ்சலித்தோமென்று சொல்லி யஞ்சலி செய்தார்
மகரிஷி புன்னகை செய்தே—அங்குமுகம்
வாடியவர் கீடுபர மானந்த மெய்த (5)

சாவித்திரி யென்னுந் தெய்வத்தை—அக்கியினும்
சக்தியினும் சீரிருவர் சிந்தனை செய்து
மாபக்தி பூட னோன்பு—நோற்றிரேல்
வந்துதிக்கு மின்பமுறச் சந்ததியொன்று (6)

## சாவித்திரி பிறத்தல்.

என்றுசொல்லிச் சென்றனர் முனி—அம்மொழியை
இவ்விருவர் கேட்டுமிகச்செவ்விதென்றெண்ணி
அன்றுமுதல் நோன்பியற்றினர்—தேவதையின்
அருளினால் மாளவிதன் திருவயிற்றில் (7)

பெண்கொடியே பிறந்ததொன்று—விண்ணவர்கள்
பிரசமலர் மழையை வருசித்தனர்.
கண் தடையின் நிழலில் வைகும்—நரபதி
தன் மனக்களிப்பினைநான் என்னென்று சொல்வேன் (8)

அப்புறஞ் சாவித்திரி யெனும்—தேவதையின்
அருளிற்கிடைத்த விளந் திருவினுக்குச்
செப்பினன் சாவித்திரியென்றே—திருநாமம்
தேசமதை யாளுமக ராஜசிம்மமேறு. (9)

தாயவட்குத் தன்னுயிரைப்போல்—தந்தைக்குத்
தண்ணமிர்தம் போலுமிந் கண்மலரைப்போல
தேயமதிலுள்ள வர்க்கெல்லாம்—இரக்ஷிக்கும்
தெய்வமது போலுமிந்தத் தையல் வளர்ந்தாள் (10)

வளரும் பொழுதினிலன்னை—நுட்ப முள்ள
மாசற்ற நன்னூல்கள்பல வாசித்துணர்ந்தாள்
குளருங்கிளியைக் குயிலை—குழல்களைக்
குற்றமிகச் சொல்லுமிளஞ் சொற்களுடையாள் (11)

மங்கைப்பருவமடைந்தாள்—அழகுகண்டு
மன்னவனும் அன்னவனின் றன்மனையுமாய்
நங்கைக்கு நாயகமென்று—வருமென்று
நாடியிருக்கும் பொழுதில நாரதர் வந்தார். (12)

## சாவித்திரிக்கு மணம் புரிவித்தல்.

வந்தவரை வந்தனைசெய்து—மலரென்ற
வார்த்தையுடை யாதேவைக்கதும் காத்த தெய்வமே
இந்த மங்கைக்குத் தகுந்தவன்—எங்குளனீர்
இயம்பிட வேண்டுமென்று நயந்து நின்றார் (13)

நின்றவரை நோக்கி முனிவர்—இதோ நிற்கும்
நிக்கில நகைக்குயிலு ளத்திருக்கின்றான்
என்றவன்றன் காலத்தியல்பும்—உரைத்துப்பின்
சுபமெனத்தேற்றிமுனி போயதின் பின்பு (14)

நன்முனிவர் சொன்னபடியே—கற்புமின்னார்
நாவிற்றுதி செய்யுமிந்தச் சாவித்திரியை
பொன்னினுக்குப் பொன்னிடுதல் போல்—கற்பதித்த
பூசணங்களிட்டு நல்ல வாசனையிட்டு (15)
பல்லக்கினி லேரிடச்செய்து—பரிசனம்
பக்கமுற்றுஞ் சூழ்ந்துவர மிக்கவிரைவாய்
செல்வத்திரு நன்னகர்விட்டு—நதிவனம்
சென்றுபல்வனநதிர முங் குன்றுங்கடந்து (16)
நாடிழந்து நகரிழந்து—வலியொடு
நயனமிழந்ததிக துயர்மலிந்து
காடுவந்து மிகமெலிந்த—கன்னியுடன்
காய்கனி கிழங்குதழை காய்சருகுண்டு (17)
பாடுபஞ்சு போலவேபட்டு—வருமொரு
பகலையனந்தசதுர் யுகமென்றெண்ணி
வாடுகின்ற சாலுவமன்னன்—மகனெனும்
மன்மதனேர் சத்தியவான் தன்னையேகண்டார் (18)
கண்டவுடனே சத்தியவான்—தந்தையொடுங்
கனல்மொழியன்னையொடு முன்னெதிர் சென்று
கொண்டல்வரக் கண்டமயில்போல்—இன்பமெய்தி
கொண்டாடினவருங் கொண்டாடினர் (19)
அப்பொழுது சாலுவமன்னன்—அங்குவந்த
அச்சுவப்பதிமுகத்தில் இச்சைசெலுத்தி

இப்பொழுது வந்தவிஷயம்—என்னவென
எண்ணிவந்த காரியத்தை அன்னவன் சொல்ல (20)
உங்களின் பசுங்கொடிதனை—வெயிலில்
உலர்ந்து மழைபனியில் உண்ணடுங்கிவாழ
எங்களின்னிளங்குமரற்கு—மணஞ்செய்யில்
என்னசுகமென்னசுக மென்றிவன்சொல்ல (21)
மத்திரதேசத்ததிபன் பின்—இனியநல்
வசனத்தினாலிவனை யிசையச்செய்ய
உத்தரவென்றுரைப்பியபின்னர்—அவ்வரசன் [விட்டான்]
உள்ளத்தைச்சந்தோஷ வெள்ளப்பள்ளத்தில் (22)
நல்லசுப முகூர்த்தத்திலே—சாவித்திரி
நங்கையென்று சொல்லுமிந்தத் தங்கமயிலை
மல்லமருந்தேரனுடைய—உபாசதப
வர்ன் கமலப்பூங்கரத்திற்றான் கொடுத்தனன் (23)
சடங்குகள் பலவுஞ்செய்து—சீதனமுந்
தந்தவிடம் பெண்டொருநாட்டங்கியிருந்து
மடந்தை மணாளன்றனையும்—சம்பந்தி
மார்களையும் வாருமெங்கள் ஊருக்கென்றிட (24)
உடந்தைப்ப டாதுவெருக்கச்—சேனையுடன்
உன்னதமுடையபெருந் தன்னகர் வந்தான்
தடம்புயமன்னவனுமே—இந்த நல்ல
தார்குழலுமீருடலு மோருயிரும்போல் (25)

## சாவித்திரி தன்னாயகனோடில்லறம் நடத்தல்

அன்புடனே யின்புற்றிருந்தார்—இதுநிற்க
அருந்ததியை நிகர்க்கும் அருங்கற்பினாள்
தன்புருடன் றன்மாதுலன்—மாமியிவர்
தம்மனதுக் கேற்றபடி நன்மைபுரிவாள் (26)

விரும்புவதை விரும்புவாள்—அன்னவர்கள்
வெறுக்கும் பொருளை முன்பே வெறுத்திடுவாள்
அருந்திய பின்னருந்துவாள்—அவர்கள் கண்
அயர்ந்த பின்னயர்ந்து முன்வியங்தெழுவாள் (27

இல்லறமே நல்லறமேன்னும்—முதுமொழிக்
கேற்றபடியன்றியகற் கேற்றமுந்தந்தாள்
சொல்லறத்தில உன்னைநிகர்ப்பார்—இல்லையென்று
மாமனொடு பார்தினம் வாழ்த்தவும் பெற்றாள் (28)

## சாவித்திரி தன்நாயகனுக்குத் திர்க்காயுள் வேண்டிமுயல்தல்.

இப்படிநாட்செல்ல வொருநாள்—நாரதர்முன்
ஈன்ற தந்தைதாயின்முன்பில் இந்தமங்கையை
கைப்பிடிக்குங்கணவனுக்கு—ஆண்டொன்றிலே
காலமுடிவென்றதினம் நாளொன்றுகண்டால் (29)

அன்றுமுதற்றெய்வந்தொழுதே—ஒருவரும்
ஆற்றமுடியாவிரதம் நோத்து மூன்றுநாள்

சென்று நான்காந்தினத்தில்—நாதனிரு
சேவடிவணங்கியொரு பாவைபோனின்று (30)
நீங்கள் செலுநீள்வனத்துக்கு—யானும்வர
நெஞ்சம் வைந்தேனென்றுமிக அஞ்சியுரைத்தாள்
மாங்குயிலே நாளைவருவாய்—நோன்பெற்றி
வாடினையுன் தேகமுற்றும் வாடுமிடைபோல் (31)
என்று மறுத்தனனவள் சொல்லும் நியாயத்துக்
கிணங்கினன் அப்பொழுதே அணங்கனையாள்
பின்றனது மாமனையும்—மாமியையும்
பெற்றமகள்போல்வணங்கி மற்றவர்சொல்லும் (32)
ஆசிவசனங்களைப்பெற்று—ராகவன்பின்
அன்றுசெல்லுஞ்சீதையன்ன மென்றிடச்சென்றாள்
தேசுடைய ராசகுமாரன்—தன்னுடைய
தேவிமுன்பு காட்டினனம்மாவனவளம் (33)
அப்பாறகிழங்குகளும்—தழைகளும்
ஆயுமலரோடு செழுங்காய்கனிகளும்
எப்பாலுமேகி மன்னவன்—பறித்தர
இளங்குயில் பெற்றுமிகவுளங்கனிந்தாள் (34)
பின்னிருவரங் கொருபக்கம்—தகையாதப்
பெருததமரத்து நிழலிருக்கையிலே
மன்னனிருகண்கள் சுழல்—நாக்குளற
மாற்றுயர்பொன்மேனி முற்றும்வேற்றுமைப்பட (35)

மல்லியொரு பூங்கொடிமிசை—சாய்வதென்ன
மங்கைமடி விழுந்ததிக சங்கடமுற்றான்
அலைபமுதகதை நீகர்வாள்—தழுவிக்கொண்
டாற்றமுடியாத்துயரத்தாற்றில் விழுந்தாள் (36)
சந்திகளைத் தியானஞ் செய்தாள்—நாதனது
தன்னையும்தன்னுடைய தன்மையையுஞ்சொல்லி
சத்தியபூதர்கை தொழுதாள்—இருணிறக்
காலனல்லவேளையென்றக் காலையில்வந்தான் (37)
சத்தியவான்றன் னுயிர்கொண்டு—சென்றனன்
சாவித்திரி கண்டுமன்னன் தன்னுடம்பினை
கைத்தலத்தால் மெல்லவெடுத்து—மண்மகளைக்
காக்கவைத்துவிட்டுயிரைக்கைக்கொண்டுசெல்லும் ()

## சாவித்திரி யமனிடம் தன்நாதனுயிரை யாசித்தல்.

அந்தகன்பின்பு தொடர்ந்தாள்—என்றுணைவன்
ஆவிதனை நீ கவர்ந்துபோவது நன்றோ
என்கணவனைக்கொண்டு நீசெல்வாய் உயிரற்ற
இந்தவுடல் வைத்திருப்பதெந்த விதஞ்சொல் (39)
ஆதலால் நானும்வருவேன்—என்றுரைத்த
ஆரணங்கைநோக்கியவன் காரணஞ்சொல்வான்
சீதமதிமுகக் கணங்கே—கற்பெனுநற்
செல்வமதைப்பெற்றிருக்கும் வல்லரசியே (40)

என்னேயமபுரத்தன்—நின்னுடைய
 நற்கணவனுக்குரிய நாண்முடிந்தகால
தானேயிவிடம் வந்தேன்—உயிரையும்
 சங்கடமில்லாது கவர்ந்தங்கு செல்கின்றேன் (41)
பாவியர்யுள்ளவர்களை—நான்வந்து
 பற்றுகிறதில்லை யெனதுற்றபடியால்
ஆவியையிம்சைப்படுத்திக்—கையிற்பற்றி
 அக்கினிநரகத்தினிற் புக்கிடச்செய்வேன் (42)
கற்பரசி நீயார்தனால்—எந்தனைக்கண்
 கண்டனைபின் கண்டதேவர் மண்டலத்திலே
விற்பனவிவேகியே சொல்வாய்—அல்லது நீ
 வெண்டியவரத்தையின்று வேண்டியேசெல்வாய் ()
தருவேனென்றனன்யமன்—சாவித்திரி
 தனமனதிலின்பமிகுத் தெண்மாமனுர்
இருநேத்திரமிழந்தார்—கொடுத்தருள்
 என்றவுடனே தருமன் நன்றென்று தந்தான் (44)
தன்றிசையை நோக்கிச் சென்றனன்—இந்தமின்னும்
 தன்னுயிரைப் பற்றுநற்போற் பின்னுமேசென்றாள்
நின்றுகண்ணுற்றுட்டியேயவன்—சினமுற்று
 நீள்வனத்தில் நீ வருதல் நியாயமேயன்று (45)
இவவிடத்தில் நில்லென்றே சென்றான்—பெண்கள்தெய்வம்
 இனிய புருஷனறற வனிதையர்க்கு

எவ்விடத்திற்போக்குன்று சொல்—அந்தகனே
பென்றுமலர்க்கால் வருந்தச்சென்றனள்பின்னும் ()

தென்புலத்து மன்னனதனை—மனத்துன்னி
சித்தமதி லெத்தினமும் வைத்திருக்கின்ற
உன் புருடனென்றைத் தவிற—வேறெதையும்
உரைத்திடு லீகுவனென றுறத்துரைத்தான் (47)

முன்போலென் மாமனென்பவர்—நகரத்தில
முடிபுனைந்திருக்கச் செய்திடுகவென்றாள்
பொன்போலு மேனியுடையாய்—தந்தனனீ
போமென்று புகன்றுமிகத் தாவி நடந்தான் (48)

பின்னுமவள் கவலையுற்று—யமதர்மன்
பின்றொடர்ந்து செல்லவவன முன்றிரும்பியே
அன்னமதை யன்னவள்ளேயே—கருவிடை
யமையும் பொழுதழியுஞ் சமைத்தையும் (49)

கணக்கிட்டு வைத்திருப்பன் யான்—அவரவர்
காலமுடிவாகுமந்தக காலத்தில் வநது
பிணக்கின்றி கொண்டு செல்குவேன்—நாதன்மிசை
பிரியமுறலுனக்குச் சரியல்லவே (50)

வீட்டுக்குச் சென்றிடுவென்றான்—இந்தநல்ல
வித்தகியு மந்தகன்றன் சித்த மகிழ

நாட்டுக்குள் உன் புகழினைக்—கற்றவர்கள்
நாட்டிவைத்த நூல்படிக்கக்கேட்டிருக்கின்றேன் (51)

படைத்திடப் பிரமனென்றும்—படைத்ததைப்
பக்ஷமுடன் ரக்ஷித்திட வச்சுதனென்றும்
துடைத்திட வல்ல கடவுள்—யமனென்றுந்
தொல்லுலகிலெல்லவருஞ் சொல்வதுமுண்டு (52)

மலையுச்சி மலைதனக்குத்—தெரியாது
மறறவர்க்குத் தோற்றுமுன தற்பெருமை
தலைவன்றனுடன் என்னையும்—அழைத்துக்கொள்
சண்டவெனத் தெண்டமதிட்டணவையிற்
சென்றாள் (53)

சண்டனுங் கிருபை புரிந்து—கணவனைத்
தவிர மற்றெதையும் கேள் தருவனென்றான்
மண்டலந் துதித்திடுமின்னாள்—கண்களால்
மற்றவனை நோக்கியெனைப் பெற்ற தந்தை தாய் (54)

மனது சந்தோஷமடைய—ஆண்மையுள்ள
மைந்தரொரு நூறவர்க்குத் தந்தருளென்றாள்
தனதுளம் போலவே தநதேன்—செல்லுமென்று
சண்டனு முருக்கறந்து கொண்டு சென்றனன் (55)

வழிதெரியாது திகைத்தாள்—சூறைக்காற்றின்
வசத்துறுந் துரும்பென மனஞ்சுழன்றாள்
விழிகளில் நீரைவடித்தாள்—அடிக்கடி [றாள்
விம்மிவிம்மி யேங்கலித்துத் தொமுகஞ்சென் (56)

கண்ணுற்ற யமதருமன்—தெய்வகன்னி
கவலையைத் தீர்க்கவெண்ணி யிவைமொழிவான்
பெண்ணிற் பெரிய கற்புளாய்—கணவனைப்
பெறற்கெண்ணி யெனதுடன் வரக்கண்டவள் (57)

உலகத்தில் நீயொருத்தியே—கறந்தபால்
உற்றமடுவிற் புகுமோ கற்றவர் சொல்
திலகத்திருநுதன் மின்னே—நானினிமேற் [வாள்
செய்வதொன்றுமில்லையெனத் தையல் புகல் (58)

தாய்தந்தைமார் கண்மகிழ—நூறு மைந்தர்
தந்தருள் செய்தாய் வரமொரு மேகதனுக்கே
சேய் வரந்தாருமையா—என்று சொல்ல
செவ்விதென்று செப்பினனே தென்புலமன்னன் (59)

செப்பிய நற்றருமவள்ளல்—அருங்கற்புச்
செந்திருவை நோக்கிவரி சிங்கங்கரடி
கும்பல் கும்பலாகத்திரளும்—வனங்களுங்
குன்றுகளுந் தீய்க்குமணற் குன்றுகளுமே (60)

நடந்திழைத் தனையுடலம—இனியுந்தன்
நகரஞ் செல்லென்ன இவள் புகலுகின்றாள்
மடந்தையர் தமக்குக் கதி—மணஞ்செய்த
மன்னனைத்தவிர விங்கு யின்னெது முண்டோ (61)

தந்திவாமத்தனையுமே—உயிரற்ற
சவத்துக்கிடும்பணிக்குச் சமானமல்லால்
எந்தவித நன்மையுமுண்டோ—நினைக்கண்ட
வந்திழை பெருங்குறையோடேகுதல் நன்றே (62)

ஈந்தனைமுன் புத்திரவரம்—நாதனின்றி
யெப்படிப் பெறுவாரதைக் கற்பரசிகள்
காந்தனுயிர் சீக்கிரங் கொடு—நானுமனக்
கவலையில்லாதகல்வேன் அவனுடனே (63)

என்னவிந்தக் கன்னிகை சொல்ல—விழித்தனன்
இந்நமன் அவ்விழிகண் அந்தகனைப்போல்
கன்னல் மொழி மின்னரசியே—நின்னுடைய
சற்புவினைமக்கிணையார் இப்புவியிலே (64)

உன்னுயிர்த்துணைவனுயிரைத்—தந்துவிட்டேன்
உன்னதமுடையவுங்கள் நன்னகர் சென்று
இன்னவன் றன்னோடு நெடுநாள்—வாழ்ந்திருப்பா [மன்
யென்றுசொல்லித் தன்னகர்க்குச் சென்றனன (65)

கிற்பாசியப்பொழுதிலே—பெருகிய
களிப்பெனுமதுக்கடல் குளித்தெழுந்து
நற்புருடன் பக்கத்தில் வந்தே—யெழுப்பிட
நயனம் வளர்ந்தவன்போல் நயந்தெழுந்து (66)

மனைமுகத்தினைப்பார்த்தே—எனக்கொரு
வண்ணமதாய்த்தோற்றியதாற் கண்ணயர்ந்திட்டேன்
எனை யெழுப்பாதிருந்ததேன்—பகற் பொழு
தேகி விட்டதே யெனதுதோகைமயிலே (67)

ஒருசிறு கனவு கண்டேன்—என்னையொரு
உத்தமன்பிணித்தயல் வனத்திடஞ்செல்ல
திருமகளனயவொரு—கன்னிவந்து
செய்பவனை வேண்டியயென்னைத் திருப்பிவந்தாள் ()

நானுமிவ் விடத்தினில் வந்தேன்—இதன்பலன்
நவின்றிடவேண்டுமென நவின்று நின்றான்
தேனதனைக் கேட்டு மகிழ்ந்து—நாளைக்கு நீர்
செம்பொன் முடிசூட்டிடுவீர் நம்பதிசென்றே (69)

என்றவுடனே சத்தியவான்—எழுந்துவா
இப்பொழுதிற் செல்வமெமதப்பனன்னைபால்
மன்றன்மலர்க் குழலணங்கே—கதிரவன்
மறைந்தனனகரிருளும் நிறைந்ததனால் (70]

சங்கடமடைகுவாரங்கே யெனச்சொலிச்
  சாவித்திரியையழைத்துத் தந்தையன்னைவாழ்
துங்கமனைவந்தவர்களின்—சேவடியைத்
  தொழுதுநின்றுண்ணங்குந் தொழுதுநின்றாள் (71)

இன்னவர்கள்வந்தவுடனே சாலுவமன்
  இருகண்தெரிய மனத்தின்பம் பெருக
தன்னருகின்மெய் மெலிந்துவாழ்—பத்தினியாங்
  தீர்குழல்உள்ளும்புரமும் பூரித்திருந்தாள் (72)

சாலுவதேசாதிபதியின் தன்மகனைத்
  தன்மருகியைக்கண்ணுற்றுத் தாங்களிருவர்
மேலுநெடுநேரத்தையின்று—போக்கிவந்த
  விதமென்னவென்றவுடன் வேந்தன்புதல்வன் (73)

பத்தினியை நோக்கிநின்றனன் அந்தநல்ல
  பாவையவள் மர்மனடிபார்த்து வணங்கி
சத்தியவான் தன்னுயிர்யமன்—கவர்ந்துபின்
  தந்ததுவரையு முள்ளசங்கதி முற்றும் (74)

சொல்லச்சொல்லக் கேட்டு மகிழ்ந்து—எங்கள்குலம்
  துலக்கிட வந்தவொரு குலக்கொடியே
வெல்லக்கட்டியே முக்கனியே யென்றுபல
  மிக்க வுரையாற்றுதித்தான் றக்கவரசன் (75)

மாமியுந்தன் மருமகளைப்—புகழ்ந்தனள்
வான்கதிருங் கீழ்திசையில் வந்துதித்ததே
பூமியை முன்கவர்ந்த சத்ரு—விண்ணடைய
புத்திமிகு சாலுவதே சத்தினிலுள்ளோர் (76)

ஆனையுடனவ்வனம் வந்தார்—அதன்மிசை
அரசரை யேற்றிவைத்துப் பரிசனமும்
சேனை புடைசூழ்ந்து வரவே—தங்கள் திருத்
தேசம்வந்து செம்பொன்முடி சென்னிக விழ்த்
தார் [77]

மத்திரதேசத்தரசன்பின்—ஒரு நூறு
மைந்தர் பெற்று வாழ்ந்தனனே யிந்த மங்கையால்
சத்தியவான் பத்தினியுடன்—மக்கள் பல
சம்பத்துகள் பெற்றதிக இன்புற்றிருந்தான் [78]

## வாழி விருத்தம்

விண்ணுளோரும் விரிகடல் சூழ்ந்த
மண்ணுளோரு மகிழ்ந்த மெய்ஞானநற்
கண்ணுளோரு மிக்காதைக் கருத்தினைக்
யெண்ணுளோரு மிக்கின்புற்று வாழியே

சத்தியவான் சரித்திரம் முற்றிற்று.

